# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்　　நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 3 விளைச்சல் : 30 திருவள்ளுவர் ஆண்டு 2053 நவம்பர் –2022

## உள்ளே...









## வேலைவாய்ப்பு மற்றும் பயிற்சித் துறைக் கலைச்சொற்கள்

Basic training centre – அடிப்படைப் பயிற்சி நடுவம்
Card index system – அட்டைக் குறியீட்டு முறை
Demonstration hall – செயல்முறை விளக்கக் கூடம்
Employment information bureau – வேலைவாய்ப்புத் தரவலகம்
Employment survey – வேலைவாய்ப்பு நிலவர ஆய்வு
Employment trends – வேலைவாய்ப்பு நிலவரப் பாங்கு
Extension of training period –பயிற்சிக்கால நீட்சி
Follow up card – தொடர் செயல் அட்டை
Guidance points – வழிகாட்டற் குறியீட்டு எண்
Job development – பணி மேம்பாடு
Job experience – பணிப் பட்டறிவு
Job study – பணி ஆய்வு
Labour clearing – மாற்றிடப் பணியமர்த்து முறை
Machine shop – பொறிக் கூடம்
Organisation chart – அமைப்பு விளக்கப் படம்
Organisational chart – நிறுவன விளக்கப் படம்
Related instruction centre – தொடர்புடைய பயிற்று நடுவம்
Shop floor training – தொழிலகப் பயிற்சி
Speculative ciruculation – உன்னிப்புச் சுற்றறிக்கை
Speculative submission – உன்னித்தனுப்புதல்
Staff strength return – பணியாளர் தொகை விளக்க அறிக்கை
Technical working group – தொழில்நுட்பச் செயற் குழு
Trade apprentice served – தொழிற்பயிற்சி பணியாளர்
Trade theory – தொழில் விளக்கப் படம்
Weekwar programme – வாரவாரியான திட்டம்

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2053 துலை (ஐப்பசி)
நவம்பர் – 2022

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே.கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

# தமிழ் அகராதியியல் நாள்

மொழிப் பயன்பாட்டிலும் பாதுகாப்பிலும் அகராதிகளுக்குத் தனியிடம் உண்டு. அகராதி என்பது சொல்லுக்குரிய பொருளை வரையறுத்துக் கூறுவதாகும். அகராதிகளை உருவாக்குபவர்களும் பயன்படுத்துபவர்களும் உயரறிவு பெற்றவர்களாகக் கருதப்பட்டனர். நிகண்டுகள் என்ற பெயரில் தமிழர்கள் அகராதி பற்றிய அறிவைப் பண்டு பெற்றிருந்தனர். சொற்களே மொழிக்கு அடிப்படை. சொற்களைப் பாதுகாத்தால்தான் மொழியைப் பாதுகாக்க முடியும். சொற்கள் பெருகப் பெருக மொழியும் வளர்ந்து உயர்வுபெறும். ஒரு மொழியிலுள்ள சொற்களையெல்லாம் "அகர"வரிசையில் அமையும்படி தொகுத்து விளக்கும் நூல் அகராதி ஆகும். அகராதி என்னும் சொல்லிலுள்ள "ஆதி" என்னும் சொல் வடமொழிச்சொல் என்று கருதியதால் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் "அகரமுதலி" என்று அழைத்தார்.

சொல்லின் பொருளைத் தவிர அதன் தோற்றம், ஆட்சி, அச்சொல் வந்துள்ள இடம், நூல் என அனைத்துத் தரவல்களையும் நாம் அகராதியில் காணலாம். பொதுப்பட அமைந்த சொல்லகராதி மட்டுமல்லாது ஏதேனும் ஒரு பொருள் (அ) தொழிலுக்குரிய தனித்தனி அகராதிகளும் தோன்றுவதுண்டு. அகரமுதலி என்பது சொற்களின் வரைவிலக்கணங்கள் கொண்ட சொற்களின் பட்டியல் ஆகும். ஒரு மொழியில் உள்ள சொற்கள் அவற்றிற்கான பொருளையும் கூறுவது அகராதி என்பர்.

## அகராதி – கடந்து வந்த பாதை

தமிழில் அகராதிகள் தோன்றுதற்கு முன் சொற்களின் பொருளை அறிந்துகொள்வதற்குப் பயன்பட்டவைதான் நிகண்டுகள். 16ஆம் நூற்றாண்டில் இரேவண சித்தர் முதன்முதல் அகரவரிசைப்படி சொற்களைத் தொகுத்து ஆக்கியதுதான் அகராதிநிகண்டு. இது செய்யுள் அமைப்பிலேயே இருந்தது. நிகண்டுகள் கடின பதங்களுக்கு மட்டுமே பொருள் கூறின. "வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா" என்பது தொல்காப்பியம். அன்றியும் ஆன்றோராட்சியில் வந்த செஞ்சொற்களை நிரலே தொகுத்து அவற்றை விளக்குவதும் நிகண்டுகளின் நோக்கமாய் இருந்தது. "வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே" என்பது தொல்காப்பியம். சொற்களை ஆராய்ந்து தேர்ந்தெடுத்து அவற்றை வழங்கும் முறை இதுவெனத் துணிதலும் நிகண்டுகளின் நோக்கமாக இருந்தது. நிகண்டுகளின் வழிவந்ததுதான் அகரமுதலி. அகரமுதலியை ஒத்துப் பயன்படும் நூல்கள் உரிச்சொற் பனுவல் என்று முற்காலத்தில் கூறப்பட்டன. சொற்களைத் தெரிவு செய்தல், சொற்களுக்குப் பொருள் கொடுத்தல், பொருளை ஒழுங்குபடுத்துதல், சொற்களின் ஒலிப்புகளைத் தருதல் என இவையெல்லாம் அகராதியியலின் கூறுகளாக அமைந்தன.

முதன்முதலில் சொற்களின் எழுத்துகளை உற்றுநோக்கி அகராதி முறையைக் கையாண்டவர்கள் 17ஆம் நூற்றாண்டின் ஐரோப்பியப் பாதிரிகளேயாவர். இவர்கள் தம் சமயம் பரப்ப வந்தவர்களே. இவர்களுக்குத் தமிழ்மொழி புதிய வேற்றுமொழியாகையால் அம்மொழியிலுள்ள சொற்களின் பொருளுணரத் தலைப்பட்டனர். அருஞ்சொல், எளிய சொல் என அனைத்துச் சொற்களுக்கும் அவர்களுக்கு விளக்கம் வேண்டி இருந்தது. அவர்கள் அனைத்துநிலை மக்களிடமும் பேசிப் பழகியதால் நூல் வழக்கிலன்றி வழக்குச் சொற்களும் அகராதியில் இடம்பெற்றன. 1833இல் யாழ்ப்பாணத்து அமெரிக்கன் திருச்சபை அதிகாரிகள் தமிழ் அகராதியொன்றும், தமிழ் – ஆங்கில அகராதியொன்றும் இயற்றப் பல்வேறு அறிஞர் பெருமக்களைக் கொண்டு சொற்கள் திரட்டினர். அவற்றையெல்லாம் ஆய்ந்து சந்திரசேகர பண்டிதர் ஒரு தமிழ் அகராதி செய்து முடித்தார். 1842இல் அது யாழ்ப்பாண அகராதி என்றும், மானிப்பாய் அகராதி என்றும் பெயரிடப்பட்டது. இதுவே தமிழ் மொழியிலுள்ள எல்லாச் சொற்களையும் அடக்க முயன்ற முதல் அகராதி.

இதற்குச் சில காலம் முன்னரே டாக்டர் இராட்லர் ஒரு தமிழ் – ஆங்கில அகராதியை வெளியிட்டார். இராட்லர் அகராதி வெளிவந்த சில காலத்துக்குப் பின்னர் வின்சுலோ சென்னையில் 1862இல் ஒரு அகராதியைப் பதிப்பித்தார். இப் பதிப்புப் பணியில் இராமானுச கவிராயர், விசாகப் பெருமாளையர், வீராசாமிச் செட்டியார் முதலிய அறிஞர்கள் ஈடுபட்டனர். இவ்வகராதியில் 67, 452 சொற்கள் இருந்தன. ஒருமொழி அகராதி மேம்பாடடையாது ஒரு

நிலையிலேயே வெகுகாலம் நின்றுவிட்டது. யாழ்ப்பாண அகரமுதலியொன்றுதான் பயன்பட்டு வந்தது. யாழ்ப்பாணத்தில் நீதியரசராய் இருந்த கதிரவேற்பிள்ளை ஒரு சிறந்த பேரகராதி வெளியிட வேண்டித் தொகுத்தவற்றை மதுரை தமிழ்ச் சங்கத்தார் தமிழ்ச் சங்க அகராதி என வெளியிட்டனர். வின்சுலோவின் தமிழ் – ஆங்கில அகரமுதலி மிகப் பெரிய நூல். இந்நூல் எளிதில் அனைவரும் பெறக்கூடியதன்று. பொதுமக்களது தேவையை நிரப்ப 1897இல் தரங்கம்பாடி அகரமுதலி தோன்றியது.

ஒரு சொல்லுக்குப் பொருள் கொடுப்பது உரிச்சொல் நிகண்டு. உரிச்சொல் நிகண்டு 16ஆம் நூற்றாண்டில் கிடைத்தாலும் அது அகராதி நிகண்டாகக் கிடைக்க பல காலம் தேவைப்பட்டது. அதற்குப் பிறகு 1824இல் நமக்குக் கிடைத்ததுதான் "தமிழ் அகராதியியலின் தந்தை" எனப் போற்றப்படும் வீரமாமுனிவர் எழுதிய சதுரகராதியாகும். தமிழ் நாட்டோடும் தமிழ் மொழியோடும் கிறித்தவம் கொண்ட தொடர்பு என்பது அளப்பரியது. நூற்றாண்டு பழைமை கொண்டது.

இத்தொடர்பால் தமிழராகவே மாறிப்போன பாதிரிமார்கள் பலர். அவர்களுள் கான்சுடன்டைன் சோசப் பெசுகி என்னும் வீரமாமுனிவர் போற்றுதற்குரியவர். இலத்தீன் மொழியிலமைந்த தம் பெயரை ஆரம்ப காலத்தில் தைரியநாதர், வீர ஆரியன், செந்தமிழ்த் தேசிகர் என மாற்றிக் கொண்டாலும், நாள்கள் செல்லச்செல்ல தமிழ்மொழி மீது கொண்ட காதலால் தம் பெயரின் வடமொழிக் கலப்பைத் தவிர்த்து வீரமாமுனிவர் என மாற்றிக்கொண்டார். தமிழகத்தில் வீரமாமுனிவர் முப்பது ஆண்டுகள் வாழ்ந்துள்ளார். அவரது சமய, சமுதாயப் பணிகளைவிட தமிழ்ப்பணிகள் ஆழமானவை. அவரது படைப்புகள் தமிழின் புதிய துறைகள் சிலவற்றிற்கு அடிகோலின. தமிழகம் வந்த நாள் முதல் தமிழ் கற்கத் தொடங்கி, தமிழ்மொழியைப் பல்வேறு தமிழறிஞர்களின் வழிகாட்டலில் பிழையறக் கற்றுத் தேர்ந்தார். தேம்பாவணி தமிழரல்லாத ஒருவரால் தமிழில் இயற்றப்பட்ட மிகச் சிறந்த கிறித்தவக் காப்பியமாகும். தம் காலத்தே வழங்கிவந்த இலக்கியங்களையும் காப்பியங்களையும் தேர்ந்தறிந்ததன் பயனே தேம்பாவணியாகும்.

அகராதித் துறைக்கு வீரமாமுனிவர் ஆற்றியுள்ள பணி குறிப்பிடத்தக்கது. முதன்முதலாக உரைநடையில் சொற்பொருள் விளக்கங்களைக்கொண்டு தோன்றிய அகராதி சதுரகராதி ஆகும். திவாகரம், பிங்கலம், உரிச்சொல் நிகண்டு, சூடாமணி நிகண்டு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டது சதுரகராதி. பெயர், பொருள், தொகை, தொடை என்னும் நான்கு பகுதிகளைக் கொண்டது. அதனாலேயே அது சதுரகராதி எனப்பட்டது. இவ்வகைப் பகுப்பு முறைக்கு முன்னைய நிகண்டுகளின் அமைப்பு முறையே காரணமாகும். இவ்வகராதி நம் நாட்டுப் பழைமையான பொருள் கூறும் முறையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது.

சரியான நிரன்முறை பின்பற்றப்பட்டு கடினச் சொற்களுக்கு மட்டும் பொருள் கூறும் பழமரபு நீக்கப்பட்டு எளிய சொற்களும் சேர்க்கப்பட்டுள்ளன என இந்த அகராதியைப் பற்றி பேரா. வையாபுரிப்பிள்ளை அவர்கள் குறிப்பிடுகிறார். வீரமாமுனிவரால் பேச்சு மொழிக்கெனப் படைக்கப்பட்டது தமிழ் – இலத்தீன் அகராதி ஆகும். 20 ஆம் நூற்றாண்டில் அகராதியியல் பெற்றுள்ள வளர்ச்சிக்கு சதுரகராதி அடிகோலியது எனலாம். அகராதிகளில் பல்வேறு வகைகளுக்குக் கால்கோள் இட்டது தமிழ் – இலத்தீன் பேச்சுமொழி அகராதி எனலாம். தமிழ்மொழியில் புதுமையான அகராதியியல் போக்குத் தோற்றம் பெற்று வளர்ச்சியடைவதற்கு வீரமாமுனிவர் மேற்கொண்ட அகராதிப் பணிகள் தெளிவான, உறுதியான தடம் அமைத்துக் கொடுத்தன. அவ்வகையில் தமிழில் அகராதியியல் துறையின் முன்னோடியாகவும் அவரை நோக்குவது பொருத்தமாக இருக்கும்.

இத்தகு பணிகளால் தமிழ் அகராதியியல் அமைப்பு முறைக்கு முன்னோடியாக விளங்கும் அறிஞர் வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில் ஆண்டுதோறும் அவரது பிறந்தநாளான நவம்பர் 8ஆம் நாளைத் "தமிழ் அகராதியியல் நாள் விழா"வாகத், தமிழ்நாடு, அரசு தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் செம்மாந்து கொண்டாடிவருகிறது. விழா என்பது என்றுமே களிப்புக்காக மட்டுமல்லாது கருத்திற்காகவும் அமைதல் வேண்டும். இதையே உயர் நோக்கமாய்க் கொண்டு இவ்வியக்ககம் தாய்மொழியாம் தமிழ் மொழியின் வளம் கூட்டும் தகைசால் அறிஞர்களுக்குப் பல்வேறு விருதுகளை வழங்கி, இனிவரும் இளம் சமூகம் நம் மொழி காக்கவும், மொழி வளர்க்கவும் வழிகாட்டுகிறது.

தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு அடித்தளமிட்ட திரு. சா. ஞானப்பிரகாசர், சொற்பிறப்பியல் அகரமுதலிக்காகத் தன்

வாழ்நாள் உழைப்பை ஈந்த மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர், அறிவியல், கணினித்துறைக் கலைச்சொல் அகராதி உள்ளிட்ட பல அகராதிகளை வெளியிட்ட அறிஞர் மணவை முசுதபா, தமிழ் அகராதியியல் துறையில் சிறந்ததொரு பங்காற்றித் தனிப்புகழுடன் விளங்கும் ஐயா சுந்தர சண்முகனார், முப்பது ஆண்டுகளாக அகராதிகளுக்காகவே உழைத்த ஈரோடு சதாசிவம் ஐயா, அருங்கலைச்சொல் அகரமுதலியின் முதன்மைப் பதிப்பாசிரியர் திரு. ப. அருளி ஐயா, தமிழ்ப் பேரகராதியின் இற்றைப்படுத்தலில் ஈடுபட்டுழைக்கும் முனைவர் வ.செயதேவன் ஐயா, பாரிசு நாட்டிலிருந்தாலும் பைந்தமிழின் அகராதியியல் மேம்பாட்டுக்கெனவே உழைத்துவரும் முனைவர் ச. சச்சிதானந்தம், சென்னைப் பல்கலைக்கழக அகராதியியல் துறையைச் சார்ந்தவர்கள், தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல்துறையினர் என, தமிழுக்காகவும் தமிழ் அகராதியியல் மேம்பாட்டுக்காகவும் உழைத்த... உழைக்கின்ற அத்துணைப் பேரறிஞர்களின் பெருந்தொண்டையும் இந்நேரத்தில் போற்றக் கடமைப்பட்டுள்ளேன்.

தமிழ் எம்மொழியையும் சாராது தனித்து இயங்க வல்ல மொழி. உலக மொழிகளில் தொன்மை மிக்கது தமிழ்மொழி. இலக்கணம் செறிவுடையது. இலக்கிய வளம் மிக்கது. நிற்க.

11.08.2022ஆம் நாள் நடைபெற்ற "தமிழ் அகராதியியல் நாள் விழா–2022"இல் பங்கேற்று, தூயதமிழ் ஊடக விருது, நற்றமிழ்ப் பாவலர் விருது, தூயதமிழ்ப் பற்றாளர் விருது ஆகிய விருதுகளைப் பெற்ற விருதாளர்களுக்கும், வருங்காலங்களில் விருதுகளைப் பெறவுள்ள தமிழார்வலர்களுக்கும் இந்நேரத்தில் என் மனமார்ந்த வாழ்த்துகளை உரித்தாக்குகிறேன். மொழிக்காப்பு ஆவணங்களான அகராதிகளைக் காலத்திற்கேற்ற பொருண்மைகளில் உருவாக்கி வெளியிட்டுவரும் இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "பிரெஞ்சு அகராதியியல் ஓர் வரலாற்றுப் பார்வை" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ் முதுகலை (ம) ஆய்வுத்துறைத் (சுயநிதிப்பிரிவு) தலைவர் முனைவர் பி. பாலசுப்பிரமணியன் அவர்களின், "சங்க இலக்கியத்தில் பசிர்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும் என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும், அவருக்கு உதவியாகச் செயற்படும் அகரமுதலி இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

"மறைமொழி வாயினன் மலிதவத்து இறைவன்
நிறைமொழிக் குரவன் நிகரில் கேள்வியன்
வீரமாமுனி என்போன் வியன் தமிழாக"

– தேம்பாவணிப் பதிகம்

# பிரெஞ்சு அகராதியியல்
## ஓர் வரலாற்றுப் பார்வை



பிரெஞ்சு அகராதியியல் – ஓர் வரலாற்றுப் பார்வை

அகராதியியலாளர், முனைவர் ச.சச்சிதானந்தம்.
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு



அகராதி

பிரெஞ்சுப் மொழி

அகர வரிசை – 'மாடு – வீடு'

- பிரெஞ்சு அகராதியியல்
- Academie francaise
- முதல் மூன்று அகராதிகள்
- Furetiere – Larousse
- Littre – Robert
- பிரெஞ்சியரும் – தமிழ் பிரெஞ்சு அகராதிகளும்
- Academie francaise
- சச்சிதானந்தமும் பிரெஞ்சு – தமிழ் அகராதிகளும்

## ஸிஸி ஃ – Sisyphe

கிரேக்கப் பெரிய கடவுளான ஷ்ஔஸ் – Zeusஇன் எதிரியும், அட்லஸின்–Atlas தந்தையுமான ஸிஸி ஃபுக்கு – Sisyphe, நரகத்தில் உள்ள மலையொன்றின் உச்சிவரை ஒரு பெரியபாறைக் கல்லைச் சறுக்கச்சறுக்க உருட்டிக்கொண்டு போகவேண்டும் என இறப்புக் கடவுளான தனத்ஒஸ் – Thanatos கடுந்தண்டனை கொடுத்தாராம். இத்தண்டனைக்கு ஒப்பீடாகச் சொல்லக்கூடிய ஓர் அரும் பெரும் கடும் பாடுதான் அகராதி எழுத ஒருவர் படும் பாடும் எனப் பிரெஞ்சு அகராதியியலில் சொல்லப்படுகிறது. இதையொத்த ஓர் உவமை அகராதியியல் பேராசான் முனைவர் எச். சித்திரபுத்திரன் அவர்களின் தமிழ் அகராதியியலில். கொடிய குற்றவாளிகளைத் தூக்கிலிட்டோ அல்லது கடுமையான பணிகளைச் செய்யச் சொல்லியோ தண்டிக்க வேண்டாம். மாறாக அவர்களை அகராதிகளைத் தொகுக்கும் படி பணித்தால் போதும். ஏனென்றால் எல்லாத் துன்பங்களும் இப்பணியில் அடங்கியுள்ளன என முன்னுரையிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## அகராதி – Dictionnaire

அகராதி என்பது மொழியின் பாதுகாப்புச்சொத்து. அகராதிகள் மொழிகளின் நாகரிகங்களையும், மக்களின் மனவளர்ச்சியையும் பிரதிபலிப்பனவாக விளங்குகின்றன. அடிப்படையில், அந்நாட்களில் அருஞ்சொற்களுக்குப் பொருள்கூறும் முயற்சியின் விளைவாக உருவாக்கப்பட்டதே அகராதி. மொழியிலுள்ள சொற்களைத் தொகுத்து, பொதுவாக அகர வரிசையில் – abc ஒழுங்கில் அவற்றிற்குரிய பொருள்களைப் பல்வேறு நெறிமுறைகளில் கூறும் நூல் அகராதி ஆகும்.

பயனாக்க மொழியியல் நோக்கில், சொற்கள் தொடர்பாக எழும் வினாக்களுக்கும், ஐயங்களுக்கும் விடையளிப்பதற்குப் பயன்படும் மொழிக் கருவியே அகராதி. அதாவது, மொழி அகராதிகள் மொழிச்சொற்களைப் பாதுகாத்து வைப்பதில் காப்பகம் – Treasure House ஆகவும், மொழியைப் பயன்படுத்துவோருக்கு ஏற்படும் ஐயங்களை நீக்குவதில் தீர்ப்பகம் – Clearing House ஆகவும், இலக்கணம், பொருள் மற்றும் பயன்பாடு தொடர்பான சிக்கல்களைத் தீர்த்து வைப்பதில் நீதிமன்றம் – Court House ஆகவும் செயற்படுகின்றன. மொழியின் செம்மையாக்க முயற்சியில் அகராதிகள் பல நிலைகளில் துணைபுரிகின்றன. மேலும், மொழிச் சமுதாயத்தின் கலாச்சார – பண்பாட்டை வெளிப்படுத்துவதிலும் அகராதிகள் பெரிதும் துணைபுரிகின்றன. பயன்பாட்டு வகையில் அகராதி என்பது ஒரு மொழியின் ஆதியும் அந்தமுமாக – alpha and omega அமைகிறது.

திருவள்ளுவரின் மொழியில் அகராதி என வழங்கப்படுவது, மோலிஎரின் மொழியில் Dictionnaire என வழங்கப்படுகிறது. வள்ளுவர் எனும் புலவர் தமிழ்ச்சொல்வளத்தைப் பயன்படுத்திய மாதிரி மோலிஎர் (Moliere) எனும் நாடகாசிரியர் பிரெஞ்சுச் சொல்வளத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்.

அகராதி என்பது தமிழில், அகரம், ஆதி எனும் சொற்களால் ஆனது. அகரம் என்றால் 'அ' வை முதலெழுத்தாகக் கொண்டு வரும் சொற்களைக் குறிக்கும். அகரம் என்பதில் அ என்பது முதலெழுத்தைச் சுட்ட, – கரம் என்பது சாரியையாக வருகிறது. ஆதி என்றால் முதல், தொடக்கம் என்று பொருள். அ எழுத்தை முதலாகக் கொண்டு தொடங்கிச் செல்வதனால் அகராதி எனப்பட்டது.

அகராதி = அகரம் +ஆதி. அகரம் = அ+கரம் தொடக்கம் அ சாரியை

Dictionnaire என்பது. இலத்தீனியச் சொல்லான Dictionnarium என்பதிலிருந்து தோன்றியது. Dictionnarium என்பது Dictio(n), arium என்ற கூட்டுச்சொல்லால் ஆனது. இலத்தீனில் சொல்லுதல் எனும் பொருள் கொண்ட dicere என்ற வினையிலிருந்து சொல்லும் விதம் எனும் பொருளில் diction வழிவந்தது. இம்மூலச்சொல் வழியாகச் சொல் புத்தகம் என்ற பொருளில் Dictionnarium பிறந்தது.

Dictio (n) + arium = Dictionnarium
Dictionnaire – le francais

Dicere –– dictio –– diction – dictionarium
↓ ↓ ↓

சொல்லுதல் சொல்லும் விதம் சொல் புத்தகம்

அகராதி ஆனது தமிழில் அகரவரிசையில் தொடங்கிச் செல்லும் சொற்கூட்டம் எனப்பொருள் தருகிறது. ஆனால் பிரெஞ்சில் dictionarium என்பது சொல் புத்தகம் எனப் பொருள் தருகின்றது. தமிழில் அகராதிக்கு

அகரமுதலி, அகரவரிசை, சொற்களஞ்சியம். சொற்சேர்க்கை, சூடாமணி, நிகண்டு, உரிச்சொல் என்பன வழங்கப்படுவது போன்று பிரெஞ்சில் Dictionnaireக்கு Vocabulaire, Lexique, Encyclopedie, Glossaire, Letterine, Nomenclature, Thesaurus என்கிற பெயரீடுகளும் வழக்கில் உள்ளன.

Dictionnaire என்ற சொல் முதன் முதல் இத்தாலியில் புழக்கத்தில் வந்தது. Ambrogio Calepino என்ற இத்தாலிய அறிஞர் 1502 இல் Dictionnaire polyglotte எனும் இலத்தீன் – இத்தாலியம் – பிரெஞ்சு பன்மொழி அகராதியை எழுதினார். அடுத்து இங்கிலாந்தில் John Withals என்பவர் 1533 இல் A Short Dictionary for Yong Beginners அகராதியையும், Sir Thomas Elyot என்பவர் 1538 இல் Dictionary : Latin – English இலத்தீன் – ஆங்கிலம் அகராதியையும் எழுதினார்கள். பின்னர் பிரான்சில் Robert Estienne என்பவர் 1539 இல் Dictionaire : Françoís – Latin பிரெஞ்சு – இலத்தீன் அகராதியையும் எழுதினார். தமிழில் அகராதி எனும் சொல்லை முதன் முதல் சிதம்பர இரேவண சித்தர் 1594 இல் அகராதி நிகண்டில் கையாண்டார்.

காலத்துக்குக்காலம் அகராதியியலாளர்கள் அகராதி பற்றிய விளக்கங்களை விரித்து வளம்படுத்தி வந்திருக்கிறார்கள், வருகிறார்கள். பன்னாட்டு மொழிகளாக விளங்கும் ஆங்கிலம், பிரெஞ்சு மொழி அகராதிகளும், தமிழ் மொழி அகராதிகளும் பகருகின்ற விளக்கங்கள் அவற்றைத் தெளிவுபடுத்தும்.

**தமிழ்**

– அடிப்படை நிலையில் அகராதி, சொல் தொகுதிகளை நிரல்பட அளிக்கும், பின்னர் அவற்றிற்குரிய பொருள்களைக் கூறும்.

–வாழ்வியற் களஞ்சியம் : தமிழ்ப் பல்கலைக்கழகம்.

**English**

– A reference book containing words alphabetically arranged along with information about their forms, pronunciations, functions, etymologies, meanings and syntactical and idiomatic uses.

– Webster's International Dictionary

**Le français**

– Recueil methodique de mots ranges le plus souvent dans l'ordre alphabetique.

– Academie française.

அகராதிகளில் பொருள் அல்லது விளக்கம் கொடுக்கப்படும் சொல் தலைச்சொல் – Headword எனப்படும். ஒரு மொழியின் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளின் தலைச் சொற்களுக்கு, இலக்கணக் குறிப்பான், பொருள், உச்சரிப்பு, விளக்கக் குறிப்புக்கள், முதலானவற்றை அகராதி அறியத்தருகிறது. சில அகராதிகள் இவற்றுடன் சொற்பிறப்பு, சொல்வரலாறு மற்றும் குறுக்குநோக்கீடு போன்றவற்றையும் அறியத்தருகின்றன. இருமொழி அல்லது பன்மொழி அகராதிகளில் தலைச்சொல் கொண்டுவரும் மொழி மூலமொழி – Source language எனவும், பொருள் கூறப்படும் மொழி இலக்குமொழி – Target language எனவும் பெயர் பெறுகின்றன

**ஆனா ஆவன்னா –Alphabet – 'மாடு – வீடு'**

ஆனா ஆவன்னா – நெடுங்கணக்கு இல்லாமல் இலக்கணம் இல்லை. பேச்சு இல்லை, இலக்கியம் இல்லை. கவிதை இல்லை. வரலாறு இல்லை. கல்வி இல்லை இந்த எழுத்துகள் மூலம்தான் விளங்க வைக்கமுடியும், கற்க முடியும், விளங்கிக்கொள்ள முடியும். எழுத்து மொழியின் அடையாளம். ஒரு மொழியின் ஒலி வடிவங்களைக் குறிக்கப் பயன்படும் வரிவடிவங்களின் தொகுப்பு நெடுங்கணக்கு – ஆனாஆவன்னா – 1'alphabet எனப்படுகிறது.

அகரவரிசை முறை–L'ordre alphabetique (alphabetical order) ஐரோப்பியர்களாலேயே அறிமுகப்படுத்தப்பட்டது. எவ்வாறெனில், alphabet – எனும் சொல் alpha, beta என்ற இரண்டு சொற்களால் ஆனது. இவ்விரண்டு சொற்களும் கிரேக்க மொழி நெடுங்கணக்கின் முறையே முதல் இரண்டு எழுத்துகள் ஆகும். முன்னர் கூறியது போல், பிரெஞ்சிய எழுத்துகள் இலத்தீனிய எழுத்துகளிலிருந்து வந்தவை, இலத்தீன் எழுத்துகள் இத்தாலிய – எத்றுய்க் மொழி எழுத்துகளிலிருந்து பின்பற்றப்பட்டவை. எத்றுய்க் எழுத்துகள் கிரேக்க மொழி எழுத்துகளிலிருந்து அமைக்கப்பட்டவை. கிரேக்க எழுத்துகள் போனிசிய மொழி எழுத்துகளிலிருந்து மாற்றுவடிவம் எடுக்கப்பட்டவை. போனிசியர்களே மனித குலத்தின் மொழி எழுத்துகளை முதலில் கண்டுபிடித்தவர்கள். கிரேக்க alpha என்பது போனிசிய alef என்ப திலிருந்தும் beta என்பது போனிசிய beth என்பதிலிருந்தும் வந்தவை. Alef என்றால் மாடு என்றும் beth என்றால் வீடு என்றும் பொருள். உற்றுநோக்கிப் பார்த்தால்... இரு மாட்டுக் கொம்புகளைத் தலைகீழாக

வைத்தது போல் A உம், பக்கப்பாட்டில் இரு அறைகள் கொண்ட வீட்டைப் போல் B உம் தோன்றும். alphabet என்றால் 'மாடு – வீடு' எனப்பொருள் கொள்ள முடியுமா?

அகராதி

(சொற் ) (காப்பகம்)

மொழிச்செம்மை ஆக்கி

(சந்தேகம்) (தீர்ப்பகம்)

பண்பாட்டுக்காவி

(இலக்கண) (நீதிமன்றம்)

**பிரெஞ்சு மொழி – le français**

ஐரோப்பிய மொழிகளே உலக மக்கள் தொகையில் 46 விழுக்காட்டினரால் பேசப்படுகின்றன. இரண்டாவது சர்வதேச மொழியாகவும் நாகரிகமொழியாகவும் திகழும் பிரெஞ்சு 430 மொழிகளைக் கொண்ட இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் சிறப்புகள் அதிகம் கொண்ட முக்கிய மொழி. பிரான்சில் பிறந்த மொழியான பிரெஞ்சு, உலக மொழிகளின் பாகுபாட்டில் ஐரோப்பிய மொழிக்குலத்தையும், இலத்தீன் (ரோமானிய) குடும்பத்தையும் சேர்ந்தது.

இலத்தீன்(ரோமானியம்)

இத்தாலியன் பிரெஞ்சு ஸ்பானியம் போர்த்துக்கேயம் புரோவன்சால் ருமேனியம்

வரலாற்றில், பிரான்சின் பூர்வீகப்பெயர் கோல் – La Gaule, பூர்வீகமொழி கோலுவா – le gaulois. ஜூலியஸ் சீசர் தலைமையில் ரோமானியர் கோல் மீது படையெடுத்து வெற்றி கொண்ட பின்னர், தமது மொழியான இலத்தீனை மக்களுக்குத் திணித்தனர். பின்னர் ஜெர்மனிய இனத்து பிராங்க் – franc பிரிவினர் இம்மண்ணில் பரவலாகக் குடியேறி நாட்டைத் தம்வசப்படுத்தினர். தமது மொழியான ஃப்ரான்சிக் le francique சொற்களை, கோலுவா – இலத்தீனுடன் கலப்புச் செய்தனர். இதன் விளைவாக ஃப்ரான்சியென் – le francien எனும் மொழி உருவானது. பிரெஞ்சிய மன்னர்களின் மொழியாக இருந்த இம்மொழி ஃப்ரான்சுவா – le françois என்றாகி இறுதியில் இன்றுள்ள ஃப்ரான்ஸ்ஏ – le français ஆனது.

ஃப்ரான்சியென் தலைநகரமான பாரிசின் கிளைமொழி. மன்னர்களின் இராசதானி பாரிஸ், மன்னர்களின் மொழி நாட்டின் மொழியாக உயர்ந்தது. பிரான்சின் பிரதேசங்களில் அவ்வவ் பிரதேச மொழிகள் பேசப்பட்டாலும் ஃப்ரான்சியென் மற்றைய பிரதேச மொழிகளை வீழ்த்தி முதல்நிலைக்கு வந்து தேசிய மொழியாகிவிட்டது. இப்பிரதேச மொழிச்சொற்கள் சில பிரெஞ்சில் நிலவுகின்றன.

Franc > francique > francien > françois > français

பதினேழாம், பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவில் கோலொச்சிய பிரெஞ்சை இன்று இக்கண்டத்தில் 63 மில்லியன் மக்களும், உலகில் 200 மில்லியன் மக்களும் மொத்தத்தில் 30 நாடுகளில் பேசுகிறார்கள். மோலிஎரின் மொழி பெல்ஜியம், லக்ஸம்பேர்க், சுவிஸ், மொனொக்கோ, அந்தோரா, ஆகிய ஐரோப்பிய நாடுகளிலும், கனடா – கியூபெக், ஐத்தி, மார்த்தினிக், குவாதலூப், குயானா ஆகிய அந்தியே அமெரிக்க நாடுகளிலும், கறுப்பு ஆபிரிக்க நாடுகளான செனெகால், மாலி, கினியா, இரு கொங்கோக்கள், புறுண்டி, கமறூன், சாட், மடகஸ்கார்

ஆகியவற்றிலும், வெள்ளை ஆபிரிக்க நாடுகளான அல்ஜீரியா, மொரொக்கோ, துனிசியா லெபனான் ஆகியவற்றிலும் அலுவலக மொழியாகவும் துணைமொழியாகவும் செயற்படுகிறது. அமெரிக்கா, இங்கிலாந்து, இத்தாலி, ஒல்லாந்து, சிரியா, பிரேஜில், முதலான நாடுகளில் இரண்டாவது மொழியாகவும் கற்பிக்கப்படுகிறது. இந்தியாவில் புதுச்சேரி, காரைக்கால், மகே, ஏனம், ஸந்தாநகூர் ஆகிய இடங்களில் இன்னமும் வழக்கில் உள்ளது.

மொழி அகம், புறம் என இரு அமைப்புகளைக் கொண்டுள்ளது. சொல் பொருள் என்பன புறஅமைப்பாகவும், எழுத்து, இலக்கணம் என்பன அகஅமைப்பாகவும் உள்ளன. பிரெஞ்சு மொழி எழுத்துகள் பிறப்புமொழியான இலத்தீன் நெடுங்கணக்கிலிருந்து தழுவி அமைக்கப்பட்டவை. சொற்களும் தாய்மொழியிலிருந்து 86.5% பிரெஞ்சுமயப்படுத்தப் பட்டவை. இலக்கணமும் மூலமொழியை ஒட்டி அமைந்துள்ளது. தாயின் குணங்கள் மகளிடம் இருப்பது இயல்புதானே! மொழி என்றால் சொற்கள்! சொற்கள் என்றால் அகராதி! அகராதிகள் பலவகைப்படும் ஆயினும், அகராதியில் சொற்கள் பற்றிய அத்தனை விளக்கமும் இருக்கும். பயன்பாட்டு மொழியியல் நோக்கில், இந்நாட்களில, சொற்கள் மீதான வினாக்களுக்கு விடையளிப்பதற்குப் பயன்படும் மொழிக் கருவியே அகராதி ஆகும்.

எந்தெந்த நாடுகளில் பிரெஞ்சு வழங்கப்படுகிறதோ, அந்தந்த நாட்டு மொழிச்சொற்களை உள்வாங்கியிருக்கிறது. இம்மொழியின் சொல்வளத்தைப் பெருக்கிக்கொள்ள சற்றொப்ப 25 பிற மொழிகளிலிருந்து சொற்கள் இரவல் வாங்கப்பட்டிருக்கின்றன. ஆனால் ஆங்கிலச் சொற்கள் தம்மொழியில் புகுவதைத்தான் பிரெஞ்சுப்பற்றாளர்கள்– அறிஞர்களிலிருந்து அரசியல்வாதிகள் வரை போர்க்கொடி காட்டுகிறார்கள். அதையும் மீறி, barman, fastfood, sandwich, chewing – gum, football, look, cool, match முதலான சொற்கள் அகராதியில்இடம் பெற்று விட்டன. தமிழ் பிரெஞ்சுச் சொற்களைக் கடன்பெற்றிருக்கிறது. பிஸ்கட் – biscuit, டாய்லெட் – toilet, ரோந்து – ronde, ஓடிக்கொலோன், eau de cologne பட்டாளம் –bataillon, பாட்டில் – bouteille, பொத்தான் – bouton, குசினி –cuisine, பாண் – pain (ஈழத்தமிழ்). தமிழ்ச்சொற்களையும் பிரெஞ்சு இரவல் வாங்கியிருக்கிறது. riz – சோறு, curry– கறி, gingembre – இஞ்சி, basmati பஸ்மதி, vetiver – வெட்டிவேர். catamaran – கட்டுமரம், paria – பறையன், teck – தேக்கு மரம், santal – சந்தணம்,



Robert Estienne (1539)

### பிரெஞ்சு அகராதியியல் – Lexicographie française

பிரெஞ்சு அகராதி என்னும் போது, அகாத்டெமி ஃபிரான்ஸேய்ஸ், ஃபுறெத்இயெர், லித்றே, லறூய்ஸ், றொபேர், அலன் றே என்கிற பெயர்கள் வரலாற்றுப் பதிவாக உள்ளன. இந்த வரலாற்றுப்பெயர்கள் இன்றி பிரெஞ்சு அகராதியியல் இல்லை!

பிரான்ஸ் வரலாற்றில் முதலாவது பிரான்சுவா (Franҫois Ier), பதின்மூன்றாம் லூயிஸ் (Louis XIII), பதினான்காம் லூயிஸ் (Louis XIV) ஆகிய மூன்று மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் தான் பிரெஞ்சு மொழி வளர்ச்சியும் எழுச்சியும் உயர்ச்சியும் பெற்றது. 1539 இல் மன்னர் Franҫois Ier பிரெஞ்சை நிர்வாக மொழியாக அங்கீகரித்தார். பிரெஞ்சு மொழி பாதுகாப்புச் சட்டமான L'edit de Villers – Cotterets 1549 இல் பிரகடனம் செய்யப்பட்டது. அதுவரைக்கும் படைப்புகளை இலத்தீனில் படைப்பது பெருமையாகவும் உயர்வாகவும் கருதப்பட்டுவந்தது. படைப்புகளைப் பிரெஞ்சில் எழுதுவதைத் தூண்டுவதற்காக பிளேயாத் – La Pleiade எனும் இலக்கிய அமைப்பை Joachim du Bellay தலைமையில் பிரெஞ்சுப் புலவர்கள் நிறுவினார்கள்.

பிரான்சில் முதல் அகராதி அமைத்தவர் எனும் பெருமை பிரெஞ்சு அகராதியியலின் தந்தையான Robert Estienne அச்சகக்காரரையே சேரும். இவர் Dictionnaire latin franҫois இலத்தீன் – பிரெஞ்சு இருமொழி அகராதியை 1531 இலும், Dictionnaire franҫois – latin contenant les motz et maniere de parler franҫois tournez en latin பிரெஞ்சு – இலத்தீன இரு மொழி அகராதியை 1539இலும் வெளியிட்டார். இதனை அடிப்படையாகக் கொண்டு பிரெஞ்சு ஒரு மொழி அகராதியை Le Thre – sor de la langue franҫoise tant ancienne que moderne எனும்

பெயரில் Jean Nicot (153() – 1600) என்பவர் எழுத ஆரம்பித்தார். ஆனால் இவ்வகராதி இவர் இறந்த பின்தான் 1606 இல் அச்சுவடிவில் பிறந்தது.

**Académie française அகாத்டெமி ஃபிரான்ஸேய்ஸ்**

பிரெஞ்சு மொழியை வளர்க்கவும், தூய்மைப்படுத்தவும், பிரெஞ்சு இலக்கண வரையறைகள் செய்வதற்கும், அகராதி தயாரிப்பதற்கும் என Academie française அகாத்டெமி ஃபிரான்ஸேய்ஸ் நிறுவப்பட்டது. இதனை Louis XIV இன் ஆட்சியில் தலைமை அமைச்சராக வீற்றிருந்த Richelieu 1635ஆம் ஆண்டு நிறுவினார். இந்நிறுவனத்தில் பிரெஞ்சில் உயர்வழக்குச் சொற்களுக்கும் இலக்கிய வழக்குச் சொற்களுக்கும் முன்னுரிமை அளிக்கின்றனர். Malesherbe, Vaugelas, Corneille, Racine, Moliere, Boileau எனப் பல அறிஞர்களும் மொழி ஆர்வலர்களும் உறுப்பினர்களாக இருந்திருக்கின்றனர். இந்த அரசு நிறுவனம் தனது முதல் அகராதியை Le Dictionnaire de l' Academie française எனும் பெயரில் 1694 இல் வெளியிட்டது. 1638 இல் ஆரம்பிக்கப்பட்டு 59 ஆண்டுகளின் பின் வெளிவந்தாலும் பூரணமான ஓர் அகராதியாக இது அமையவில்லை. குறிப்பாக அகரவரிசையில் சொற்கள் அமைக்கப் படாததும் ஒரு குறை.

அகாதடெமி ஃபிரான்ஸேய்ஸ் ஒரு பத்துப்பேர் கொண்ட அறிஞர் குழு கொண்டது. பெரும்பாலோர் தேசிய கல்வி அமைச்சைச் சேர்ந்த பேராசிரியர்களாக இருப்பர். இவர்கள் வாரத்தில் ஒன்றுகூடி அகராதி பற்றி கலந்தாலோசிப்பர். Hélene Carrere d'Encausse எனும் பெண்மணி 1999 இலிருந்து இதுவரைக்கும் அகராதிக்குழுவின் தலைவராக இருக்கிறார். 1694, 1718, 1740, 1762, 1798, 1835, 1878, 1932 – 1935, 1992 ஆகிய ஆண்டுகளில் ஒன்பது பதிப்புகள் வெளிவந்திருக்கின்றன. ஒன்பதாவது பதிப்பில் நான்கு அடங்கல்கள். இவற்றில் முதலாவது 1992 இலும், இரண்டாவது 2000 இலும், வெளியாகின. மூன்றாவது 2010 இலும், நான்காவது 2015 இலும் வெளிவந்திருக்கின்றன. இந்த நான்கு அடங்கல்களிலும் 58000 பதிவுச்சொற்கள் இடம்பெறுகின்றன. ஆனால் 1935 இல்வெளிவந்த இரு அடங்கல்களில் 35000 பதிவுச்சொற்கள் இடம்பெற்றிருந்தன. இச்சொற்களில் வழக்கொழிச் சொற்களும், புதுச்சொற்களும் – போய்வருகின்றன. இவ்வகராதியில் உயர்வழக்குச் சொற்கள், இலக்கியச்சொற்களே பெரும்பாலும் சேர்க்கப்படுகின்றன.

**அகராதியியலாளர்களும் அகராதியியல் நிறுவனங்களும்**

பிரெஞ்சு அகராதி பிறப்புக்குப் பதினேழாம் நூற்றாண்டு பெரிய நூற்றாண்டாகத் திகழுகிறது. இந்நூற்றாண்டு மூன்று பிரெஞ்சு ஒரு மொழி அகராதிகளை வெளியாக்கி பிரெஞ்சு அகராதியியலின் உச்ச வளர்ச்சியைக் காட்டியது. அகாத்டெமி ஃபிரான்ஸேய்ஸ் நிறுவனத்தின் தலையாய நோக்கம் அகராதி அமைப்பதுதான். அகராதிக் குழுவில் இருந்தவர்கள் கருத்து வேறுபாட்டினாலும் காழ்ப்புணர்ச்சியினாலும் பிரச்சினைபட்டதால் தனித்தனியாக அகராதி செய்வதில் ஈடுபட்டனர். இதனால் இந்நிறுவனத்து அகராதி வேலையில் மிகத் தாமதம் ஏற்பட்டது. இங்கு முரண்பட்டு இயங்கியவர்களில் Pierre Richelet ( 1631 – 1694), Antoine Furetiere (1620 – 1688) என்பவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். 1680 வெளியான Richelet இன் இரு அடங்கல்கள் கொண்ட Le Dictionnaire français contenant les mots et les choses (சொற்களும் பொருட்களும் அடங்கிய பிரெஞ்சு அகராதி) என்ற அகராதிதான் உண்மையான பிரெஞ்சு மொழி ஒருமொழி அகராதியாகச் சிறப்புப்பெறுகிறது. Furetiere இரு அடங்கல்களாக Dictionnaire Universe, contenant tous les mots tant vieux que modernes et les termes de toutes les Sciences et des Arts (அனைத்து விஞ்ஞான, கலை தொடர்பான நவீன சொற்களுடன் பண்டைய சொற்களும் கொண்ட பல்கலை அகராதி) எனும் அகராதிக்காக உழைத்தார். இது இவரின் மறைவுக்குப் பின்னர் தான் 1690 இல் வெளிவந்தது. ஆனால் அகாத்டெமியின் அகராதி 1694 இல் வந்தது. Furetiere இன் அகராதி அகாத்டெமியின் அகராதியை அப்படியே ஒட்டி பிரதி செய்யப்பட்டது என அவர் பழி சுமத்தப்பட்டார்.

பதினெட்டாம் நூற்றாண்டிலும் புதிய அகராதி உருவாக்கலிலும், முன்னர் வந்த அகராதிகளைப் புதுப்பித்தலிலும், கலைக் களஞ்சியங்கள் தயாரித்தலிலும் பல அறிவு ஜீவிகள் ஈடுபட்டனர். இவர்களில் Pierre Bayle ( Dictionnaire historique et critique –1740 ), Trevoux ( Dictionnaire Universel françois – latin), Basnage de Beauval, Abbe Feraud (Dictionnaire critique de la langue française), முதலானோர்கள் வரலாற்றில் இடம் பெறுகிறார்கள். l'Encyclopedie ou le Dictionnaire raisonne des sciences, des arts et des metires எனும் பெரிய கலைக்களஞ்சியம் ஒன்று

35 அடங்கல்களாக 1777 இல் Diderot, d' Alembert ஆகிய அறிவு ஜீவிகளால் தொகுக்கப்பட்டது.

பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாக அரசியலில் மட்டும் பாரிய மாற்றம் ஏற்படவில்லை, மொழியியலிலும் பெருமாற்றம் ஏற்பட்டது. புரட்சி, அரசியலுடன் விஞ்ஞானம், தொழில் நுட்பம், வணிகம் எனப் பலதுறைகளிலும் புதுச்சொற்கள் உருவாகின. அத்துடன் ஆங்கிலச் சொற்களும் புகுந்தன. இதனால் பிரெஞ்சு அகராதியியலில் திருப்பம் ஏற்படலாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பிரெஞ்சு வரலாற்று மொழியியலில் ஒரு திருப்பம்! Emile Littre Maximilien (1801–1881) என்ற பல்துறை அறிவு வாய்ந்த அறிஞர் Dictionnaire de la langue française (பிரெஞ்சு மொழியின் அகராதி) எனும் அகராதியை நான்கு அடங்கல்களில் தனது நண்பன் Hachette பதிப்பகத்தில் 1872இல் வெளிக் கொணர்ந்தார். கற்றவர்கள் மத்தியில் பெரு வரவேற்பைப் பெற்றது. இந்த அகராதி. 1859 இல் தொடங்கப்பட்ட அகராதிப்பணி 1872இல் தான் முடிவடைந்தது. பிரெஞ்சு மொழியில் சொற்பிறப்பு பற்றிய தகவல்களைத் தாங்கிவந்த இவ்வகராதி பிரெஞ்சு மொழிக்கு ஓர் நோக்கீட்டு அகராதியாகவும் சிறந்து விளங்கியது. இன்று வரைக்கும் இவ்வகராதி இவரின் பெயராலேயே Littre என அழைக்கப்படுகிறது. Littreக்குப் பின்னர், பிரெஞ்சு அகராதியின் நினைவுச்சின்னம் போல் திகழ்பவர் Pierre Larousse (1817–1865) இவர் தனது பெயரில் ஒரு பதிப்பகத்தை 1852 இல் நிறுவி, 1856 இல் le Nouveau Dictionnaire de la langue française (பிரெஞ்சு மொழியின் புதிய அகராதி) எனும் அகராதியை வெளியிட்டு வரலாற்றில் இடம்பிடித்துக்கொண்டார். இது மாணவர்களுக் கென்று ஆக்கப்பட்டது. பெரும் வெற்றியையும் பெருவரவேற்பையும் மக்களிடையே பெற்றது. தொடர்ந்து 1865க்கும் 1878க்கும் இடையில் பதினேழு அடங்கல்கொண்ட Grand dictionnaire universel du XIX e siecle (20ஆம் நூ ற்றாண்டின் பல்கலைப் பேரகராதி)ஐயும், 1906இல் 714 பக்கங்கள் கொண்ட le Petit Larousse illustre (பட விளக்தகத்துடன் சிறிய லறூஸ் அகராதி) ஐயும் தனது பதிப்பகத்தில் வெளியிட்டார். "சொல்லுக்குப் பொருள் அறிவதற்கு அகராதியைப் பார் எனச் சொல்லாமல் லறூஸ் ஐப் பார்" எனச் சொல்லும் வழக்கம் இப்போதும் பேச்சு வழக்கு நடைமுறையில் நிலவுகிறது.. இவ்வகராதிகளுக்குக் கிடைத்த ஆதரவையும் வெற்றியையும் பார்த்து ஒரு சில அகராதியியல் வல்லுனர்களும் நிறுவனங்களும் அகராதிகளை எழுதினார்கள். இவர்களில் குறிப்பிடத்தக்கவர் Paul Robert. ஆயினும் 150 ஆண்டுகளுக்கு மேலாகியும் லறூஸை (1852 – 2009) வீழ்த்த முடியவில்லை!

லறூஸுக்குப் – Larousseக்குப் பின் இருபதாம் நூற்றாண்டின் அகராதியியலில் முன்னிலையில் நிற்பவர் றோபேர் – Robert. றோபேருக்கு அகராதி தயாரிப்பதில் தோள் கொடுத்த Alain Rey ஆலன் றே, Josette Rey – Debove ஜெர்ஸேத்றே – டெபோவ் குறிப்பிடத்தக்க வல்லுநர்கள். Larousse, Furetiere ஐயும், Robert, Littre ஐயும் அடியொட்டிச் செல்வதாகச் கூறப்படுகிறது.

**வயது, நிலை, பயன்பாடு அடிப்படையில் பிரெஞ்சு அகராதிகள் தரும் வரை விலக்கணங்கள் .**

a. 7–10 வயதுடைய ஆரம்பப்பாடசாலை மாணவருக்கான அகராதி...(20,000 சொற்கள்)

Un livre qui presente les mots ranges en ordre alphabetique avec leur definition. (அகரவரிசையில் ஒழுங்குபடுத்தப்பட்ட சொற்களுக்கு அவற்றின் வரைவிலக்கணம் தரும். ஒரு புத்தகம்) – Dictionnaire Robert.

b. 8 – 10 வயதுடைய ஆரம்பப்பாடசாலை மாணவருக்கான இன்னோர் அகராதி... Ouvrage qui renseigne sur l'orthographe, la nature, le sens et l'emploi des mots d'une langue classes generalement par ordre alphabetique. (பொதுவாக அகரவரிசையில் அமைக்கப்பட்ட மொழியொன்றின் சொற்களின் எழுத்தமைப்பு, இலக்கணம், பொருள், பயன்பாடு பற்றித் தரும் நூல்.Dictionnaire Hachette Juniors...

c. 9 – 12 வயதுடைய பாடசாலை – கல்லூரி மாணவருக்கான பேரகராதி...(23800 சொற்கள்)....
Livre qui regroupe un certain nombre de mots d'une langue classes, par ordre alphabetique qui donne leur definition ou leur traduction dans une autre langue(அகரவரிசையில் ஒழுங்குபடுத்தப்பட்ட மொழியொன்றின் சொற்களுக்கு வரைவிலக்கணம் அல்லது இன்னொரு மொழியில் மொழிபெயர்ப்புத் தரும் புத்தகம்,
– Larousse Dictionnaire Super Major.

d. வெளிநாட்டு இளையோருக்கான பிரெஞ்சு அகராதி....

Lexique ou vocabulaire d'une langue soit ensemble des mots de cette langue dans 1'ordre alphabetique avec des divers sens. (வேறுபட்ட பொருள் கொண்டு அகரவரிசையில் உள்ள மொழி யொன்றின் பதங்கள் அல்லது சொற் புத்தகம்).

–Dictionnaire FLE..

e.1967இல் வெளிவந்த றொபேர் அகராதி.... Recueil des mots ranges dans un ordre convenu. (ஒரு பொருத்தமான ஒழுங்கில் அமைக்கப்பட்ட சொல் அடங்கல்).

– Le Petit Robert (முதல் பதிப்பு – 1967)

F.பிரெஞ்சு மொழியின் அடிப்படை அகராதி (1958)...
Livre explique le sens des mots d'une langue. (ஒரு மொழியின் சொற்களின் பொருள் விளக்கும் புத்தகம்). – G. Gougenheim

g. படவிளக்கத்துடன் வெளிவந்த கலைக்களஞ்சிய அகராதி (1905)... Recueil des mots d'une langue ranges par ordre alphabetique, et suivis de leur definition ou de leur traduction. (சொற்கள் அகரவரிசையில் அமைக்கப்பட்டு, அவற்றின் வரைவிலக்கணக் கணங்கள் அல்லது மொழிபெயர்ப்புகள் கொண்டுவரும் ஒரு மொழியின் சொல் அடங்கல்).

– Dictionnaire encyclopedique, Petit Larousse

h.19 ஆம் நூற்றாண்டில் வெளிவந்த பிரபல்ய அகராதி (1873)....
Recueil des mots d'une langue, des termes d'une science, d'un art ranges par ordre alphabetique ou autre, avec leur signification. (அறிவியல், கலையின் பதங்கள் அவற்றின் பொருளுடன் அகரவரிசையில் அமைக்கப்பட்ட ஒரு மொழியின் சொல் அடங்கல்).

– Emile Littre( 1873)

i.பிரெஞ்சு மொழியில் வெளிவந்த மூன்றாவது அகராதி (1690)..... Recueil fait en maniere de catalogue de tous les mots d'une langue, ou d'une ou plusieurs sciences. (மொழியொன்றின் அனைத்துச்சொற்களை அல்லது ஒன்று அல்லது பல அறிவியல் களின் விவரப்பட்டியல் இடும் சொல் அடங்கல்.).

– Furetiere (1690)

j.பிரெஞ்சு அகராதி உருவாக்கத்திற்கு நிறுவப்பட்ட அகாட்தெமி ஃப்ரான்ஸேய்ஸ் தரும் வரைவிலக்கணம்.
Recueil methodique de mots ranges le plus souvent dans l'ordre alphabeti que.(பெரும்பாலும் அகரவரிசை ஒழுங்கில் முறைப்படி தொகுக்கப்பட்ட சொற்கூட்டம்.)

– Academie française (1635)

காலத்துக்குக்காலம் அகராதியியலாளர்கள் அகராதி பற்றிய விளக்கங்களை விரித்து வளம்படுத்தி வந்திருக்கிறார்கள், வருகிறார்கள். பிரெஞ்சு அகராதியியல் அகராதிகளை வெளியிட்ட அகராதி நிறுவனங்கள், அகராதியியலாளர்களின் வரைவிலக்கணங்கள் அகராதியியலில் ஏற்படும் பரிணாம வளர்ச்சியைக் காட்டி நிற்கின்றன என்பதற்கு மேற்காணும் வரைபுகள் சான்று ஆகும்.

தொடரும்...

## இயக்குநர்? இயக்குனர்?

இயக்குநர், இயக்குனர் இவற்றில் எது சரியானது என்ற குழப்பம் பலருக்கும் இருக்கலாம்.

வினைச்சொல் அடியிலிருந்து ஒரு பெயரைத் தோற்றுவிக்கும்பொழுது மகிழ்நன், பொருநன், ஆடுநர், பாடுநர் என்றே சங்ககாலம் தொட்டு வழங்கி வருகின்றனர். ஆடுனன் என்றால் ஆடினான் போல வினைத்தன்மை – சாயல் இருக்கின்றது. அதைப் பெயராக்கும்போது ஆடுநன் என்றால் பெயர்த்தன்மை – சாயல் படிகிறது. ஆடுனன் என்பதற்கும் ஆடுநன் என்பதற்கும் இன்று ஒலிப்புமுறையில் வேற்றுமை போய்விட்டதுதான் இக்குழப்பத்திற்குக் காரணம். எனினும் எழுதும்போது இயக்குநர், ஓட்டுநர், நடத்துநர், என எழுதுவதே வினைச்சொல்லினின்றும் வேறுபடுத்தித் தெளிவுபடுத்துவதாகும்.

நன்றி : உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்

# சங்க இலக்கியத்தில் 'பிசிர்'

முனைவர் பி. பாலசுப்பிரமணியன்
உதவிப் பேராசிரியர் & துறைத்தலைவர்
(சுயநிதிப்பிரிவு)
தமிழ் முதுகலை மற்றும் ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635601, திருப்பத்தூர் மாவட்டம்.

ஒரு மொழியில் உள்ள சொற்களின் எண்ணிக்கையைக் கொண்டு அதன் பழமையை, வளத்தைப் புரிந்து கொள்கிறோம். அந்தச் சொற்கள் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் பயன்படுத்தப்படுகின்றனவா? என்பது குறித்து ஆராய வேண்டியிருக்கிறது. தொல் சமூகத்தில் பயன்பாட்டில் இருந்த ஒரு சொல் சமகாலம் வரையிலும் நிலைத்து நிற்காமைக்கான காரணத்தையும் எந்தக் காலம் வரை வழக்கில் இருந்தது என்பது பற்றிய தொடர் ஆய்வும் இன்றைய தேவையாய் இருக்கிறது. அந்தவகையில், சங்கப் பாடல்களில் இடம்பெற்றிருக்கிற பிசிர் என்ற சொல்லின் பொருளை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

## பிசிர்

பிசிர் என்ற சொல் நற்றிணையில் 67, 299 ஆம் பாடல்களிலும் ஐங்குறுநூற்றில் 461 ஆம் பாடலிலும் பதிற்றுப்பத்தில் 11,17,25,41,42,60,62,72 ஆகிய பாடல்களிலும் பரிபாடலில் 6 ஆம் பாடலிலும் அகநானூற்றில் 210,250,283 ஆகிய பாடல்களிலும் புறநானூற்றில் 225 ஆம் பாடலிலும் படைப்பாளிகளால் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆக, 16 பாடல்களில் பிசிர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இதனோடு பிசிர என்ற சொல் பதிற்றுப்பத்தில் 15,40,50 ஆகிய பாடல்களிலும் பிசிரோன் என்ற சொல் புறநானூற்றில் 215 ஆம் பாடலிலும் பிசிராந்தை என்ற சொல் புறநானூறு 67 ஆம் பாடலிலும் இடம்பெற்றுள்ளது.

'பிசிர்' என்பதற்குத் 'துளிமழை' எனப் பொருள் தருகிறது ந. கதிரைவேற்பிள்ளையின் தமிழ்மொழியகராதி.

'பிசிர் – இது பாண்டிய மண்டலத்தில் உள்ளதோர் ஊர்' என்கிறது அபிதான சிந்தாமணி.

## நற்றிணை

தொகைநூல்களுள் முதன்மையாகக் கருதப்படுகின்ற நற்றிணையில் 67, 299 ஆகிய பாடல்களில் பிசிர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

பகற்குறி வந்துநீங்கும் தலைமகனைத் தோழி வரைவுகடாயதாக அமைந்த பாடலைப் பேரிசாத்தனார் பாடியுள்ளார்.

"மாலைப்பொழுதாயிற்று எமது கடல்துறை யாரும் இன்றித் தனிமை கொண்டது. எம் சுற்றத்தாரும் மீன் வேட்டையின் பொருட்டுக் கடலிற் சென்று விட்டனர். வரும் வழி துன்பமுடையது. ஆகவே, பொங்குகின்ற பிசிரையும் முழவு இசைப்பது போன்ற ஒலியையும் கொண்ட அலை எழுந்து உடைந்து விழுகின்ற கடற்கரையில் உள்ள நெய்தல் நிலத்தில் நாங்கள் வாழுகின்ற எமது ஊரில் நீங்கள் இன்று இரவு தங்கிச் செல்வதால் என்ன குறை வருமோ?" எனத் தோழி தலைவியின் பிரிவாற்றாமையைக் கூறுவது போலக் குறிப்பினால் வரைவு தோன்றக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

"பொங்கு பிசிர்

முழவு இசைப்புணரி எழுதரும்

உடை கடற் படப்பை எம் உறைவின்
ஊர்க்கே?"

என்ற பாடலில் (நற்றிணை, 67) பொங்கு பிசிர் என்பதற்குப் பொங்கும் நுரை என விளக்கமளித்துள்ளதைக் காணமுடிகிறது. இதனைப் பொங்கும் நீர்த்துளி எனவும் பொருள் கொள்வர்.

வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் பாடிய 299 ஆம் நெய்தல் நிலப் பாடல், சிறைப்புறத்தானாக இருக்கும் தலைவனுக்குத் தோழி சொல்லியதாக அமைந்துள்ளது.

"வில்எறி பஞ்சி போல மல்கு திரை
வளி பொரு வயங்கு பிசிர் பொங்கும்
நளி கடற் சேர்ப்பனோடு நகாஅ ஊங்கே".

என்ற பாடலில் (நற்றிணை, 299) பிசிர் என்ற சொல் இடம்பெற்றுள்ளதை அறிய முடிகிறது. "வில்லால் அடிபட்ட பஞ்சுபோல அலைகள் மேன்மேற் பிசிர்களைப் பரக்கச் செய்யுமாறு காற்று வீசுகின்ற கடற்கரைக்குத் தலைவனாகிய அச்சேர்ப்பனோடு நாம் மகிழ்ந்து கூடாத நாள் என்பது நாம் வாழ்ந்ததும் வாழாத நாள் ஆகும் என்று நாம் உறுதியாக அறிந்து கொண்டோம் அல்லவா?" என்ற பொருண்மையில் மேற்கண்ட பாடலுக்கு உரை எழுதப்பட்டுள்ளது. இங்குப் பிசிர் என்பது நீர்த்திவலை, நீர்த்துளி என்ற பொருளில் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. மேற்கண்ட இரண்டு நெய்தல் நிலப்பாடல்களையும் பேரிசாத்தனார் பாடியுள்ளார்.

## ஐங்குறுநூறு

தலைவன் பிரிந்தபோது தலைவி ஆற்றாது வருந்தினாள். அப்போது, தோழி, தலைவர் கூறிய பருவம் வந்தது ஆதலின் அவர் வருவர் எனக்கூறி ஆற்றியிருக்குமாறு வற்புறுத்துவதாகப் பத்துப் பாடல்கள் பாடப்பட்டுள்ளன. இந்தப் பத்துப்பாடல்கள் தோழி வற்புறுத்த பத்து என்ற தலைப்பின்கீழ் அமைந்துள்ளன. இந்தப் பாடற்பகுதிகள் முல்லைநிலத்திற்குரியவை. பாடல்களைப் பாடியவர் பேயனார்.

"வான் பிசிர்க் கருவியின் பிடவு முகை தகைய
கான் பிசிர் கற்ப, கார் தொடங்கின்றே
இனையல் வாழி...."

என்ற 461 (ஐங்குறுநூறு, 461) ஆம் பாடலில் வான் பிசிர், கான் பிசிர் என்ற சொற்கள் இடம்பெற்றுள்ளன.

"தோழி வருந்தற்க! வானம் சிதறிய மழைத்துளியாலே பிடவம் அழகிய மொட்டுகளைத் தோற்றுவிக்கவும் அம்மழையை ஏற்றுக் கொண்ட கானம் நீர்த்துளிகளை எங்கும் சிந்தவும் கார்ப்பருவம் தொடங்கிவிட்டது எனத் தோழி கார்ப்பருவ வருகையைச் சொல்கிறாள்". மேற்கண்ட பொருளிலிருந்து பிசிர் என்ற சொல்லிற்கு மழைத்துளி, நீர்த்துளி என்ற பொருளைக் கையாளுகின்றனர் உரையாசிரியர்கள். பிசிர் என்பதற்கு நுண்ணிய மழைத்துளி என்றும் பொருள் கொள்வர்.

## பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்து சேர மன்னர்களைப் பற்றி பாடப்பெற்ற புறநூல். இந்நூலில் 11,17,25,41,42,60,62,72 ஆகிய எட்டுப் பாடல்களில் பிசிர் என்ற சொல் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

குமட்டூர்க் கண்ணனார் பாடிய இரண்டாம் பத்தில் வெற்றிச் செல்வச் சிறப்பு என்ற தலைப்பிலமைந்த 11 ஆம் பாடலில்,

"வரைமருள் புணரி வான் பிசிர் உடைய"

என்ற தொடர் (பதிற்றுப்பத்து, 11) பதிவு செய்யப்பட்டுள்ளது. கடலிலே மலைபோல அலைகள் பெரியனவாய் எழுகின்றன. அவ்அலைகள் சிறுசிறு துளிகளாக உடைந்து சிதறும் வகையில் காற்றுப் பாய்ந்து அடிக்கிறது என உரை எழுதப்பட்டுள்ளது. திவலை (நீர்த்திவலை), சிறுசிறு துளிகள் என்று பிசிர் என்பதற்கு அருஞ்சொற் பொருளில் பொருள் தரப்பட்டுள்ளன.

"துளங்கு பிசிர் உடைய மாக்கடல் நீக்கி
கடம்பு அறுத்து இயற்றிய வலம்படு வியன்பணை"

என்ற 17 ஆம் பாடலில் (பதிற்றுப்பத்து, 17) பிசிர் என்ற சொல் வந்துள்ளது. "அசைதலையுடைய நீர்த்துளியாகச் சிதறும்படி பெரிய கடலைக்கடந்து அங்குள்ள காவல் மரமாகிய கடம்ப மரத்தினை வெட்டி அம்மரத்தினால் வெற்றி பொருந்திய பெரிய முரத்தினைச் செய்தான் சேரலாதன்"

என்பதாகப் பாடலுக்குப் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. இங்கு, பிசிர் என்பதை நீர்த்துளி என்பர். பிசிர் என்பதற்குச் சிறுதுளி எனப் பொருள் கொள்ளுவர் உரையாசிரியர்கள்.

பாலைக்கௌதமனார் மூன்றாம்பத்தில் வென்றிச்சிறப்பு என்ற தலைப்பிலமைந்த 25 ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

"கடுங்கால் ஒற்றலின் சுடர் சிறந்து உருத்து

பசும் பிசிர் ஒள் அழல் ஆடிய மருங்கின்"

என்ற பாடலில் (பதிற்றுப்பத்து, 25) பிசிர் என்ற சொல் வந்துள்ளது. "கடுங்காற்று மோதி அடித்தலால் காட்டுத்தீ சுவாலை மிகுந்து தோற்றித் தீப்பொறி பறக்கப் பற்றி அழித்த இடங்களை உடையன" என்ற பொருளில் உரை எழுதுகின்றனர். இங்கு, பிசிர் என்பது தீப்பொறி என்று பொருள்கொள்ளப்படுகிறது.

பரணர் பாடிய ஐந்தாம் பத்தில் வென்றிச்சிறப்பு என்ற தலைப்பிலமைந்த 41 ஆவது பாடலில்

"கால் உளைக் கடும்பிசிர் உடைய வால் உளைக்

கடும் பரிப் புரவி ஊர்ந்த நின்"

எனப் பிசிர் (பதிற்றுப்பத்து, 41) என்ற சொல் வந்துள்ளது. "செங்குட்டுவன் குதிரையைச் செலுத்தும் வேகத்தால் எழும் காற்றினால் கடலலை வருந்திச் சிறு திவலைகளாக உடைகின்றன" என உரையாசிரியர்கள் எழுதுகின்றனர். பிசிர் என்பதற்குச் சிறுநீர்த்திவலை என்பது பொருள்.

"மா இருந் தெண்கடல் மலிதிரைப் பௌவத்து

வெண்தலைக் குரூஉப் பிசிர் உடைய

தண்பல வரூஉம் புணரியின் பலவே"

என்ற 42 ஆம் பாடலில் பிசிர் (பதிற்றுப்பத்து, 42) என்ற சொல் இடம்பெற்றுள்ளது.

"கடலினது மிக்க அலைகளையுடைய பரப்பில் வெள்ளிய தலையையுடைய நுரை பிசிராக உடையும்படி தள்ளிய பலவாக வரும் அலைகளைக் காட்டிலும் பல என உரை எழுதுவர். பிசிர் என்பதற்கு நுண்ணிய திவலை என்று பொருள்.

"பொங்கு பிசிர்ப்புணரி மங்குலொடு மயங்கி

வரும் கடல் ஊதையின் பனிக்கும்

துவ்வா நறவின் சாய்இனத்தானே"

என்ற அறுபதாம் பாடலில் (பதிற்றுப்பத்து, 60) பிசிர் என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளது. "பொங்குகின்ற பிசிரையுடைய அலைகளோடும் முகில்களோடும் கலந்து வருகின்ற கடலினது குளிர்ந்த காற்றால் உடல் நடுங்குகின்றதற்கு இடமாயிருப்பதுமான உண்ணப்படாத நறவென்னும் ஊரின்கண்ணே மென்மையுடைய மகளிரிடத்தேயுள்ளான்" எனக் குறிப்பிடுவர். இந்தப் பாடலுக்குரிய அருஞ்சொற்பொருள் விளக்கத்தில் பிசிர் என்பதற்குப் பொருள் இடப்படவில்லை.

"…………………….. பசும் பிசிர் ஒள் அழல்

ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர் திகழ்பு"

என்ற 62 ஆம் பாடலில் பிசிர் (பதிற்றுப்பத்து, 62) என்ற சொல்லுக்குத் தீப்பொறி என்று பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. பசிய தீப்பொறிகளையுடைய ஒளி பொருந்திய நெருப்பு (ஊழியினிறுதிக் காலத்தில்) சூரியன் பல உருவங்கொண்டது போன்ற மாயத்தோடு ஒளிதிகழப் பெற்று என்று உரை எழுதப்பட்டுள்ளது.

"பொங்கு பிசிர் நுடக்கிய செஞ்சுடர் நிகழ்வின்

மடங்கல் தீயின் அனையை"

என்ற 72 ஆம் பாடலில் (பதிற்றுப்பத்து, 72) அமைந்துள்ள அடிகளுக்கு, "பொங்குகின்ற பிசிரையுடைய வெள்ளத்தை வற்றச் செய்யும் பொருட்டு சிவந்த ஒளி திகழ்தலை உடைய வடவை என்னும் ஊழித்தீயைப் போன்றனை என்பர்" உரையாசிரியர். இங்கு, பொங்குபிசிர் என்பதற்கு மிக்க நீர்த்துளிகளையுடைய வெள்ளம் என்று பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், பதிற்றுப்பத்தில் பிசிர என்ற சொல்லும் இடம்பெற்றுள்ளதை அறிகிறோம்.

"கொடி விடுஉ குரூஉப் புகை பிசிர"

என்ற 15 ஆம் (பதிற்றுப்பத்து, 15) பாடலிலுள்ள அடிக்கு, "படர்ந்து எறிகின்ற நிறமுடைய புகை" எனப் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளமையை அறிகிறோம். இங்கு

'பிசிர' என்பதற்கு அருஞ்சொற் பொருளில் உரையாசிரியர்கள் விளக்கம் கொடுக்கவில்லை என்பது கவனத்திற்குரியவை.

"பாகர் ஏவலின் ஒண் பொறி பிசிர"

என்ற 40 ஆம் பாடலில் (பதிற்றுப்பத்து, 40) பதிவுசெய்யப்பட்டுள்ள பிசிர என்ற சொல்லுக்கு ஒளிபொருந்திய தீப்பொறிகள் என்று பொருள் அளிக்கிறார் உரையாசிரியர்.

'அவ்வில் பிசிர' (பதிற்றுப்பத்து, 50) என்ற சொற்களுக்கு 'விற்கள் அலைகளின் பிசிர் போல விளங்க' என்ற பொருள் கொடுக்கப்பட்டுள்ளது.

பரிபாடல்

பரிபாடலில் வையைப் பற்றி பாடியிருக்கும் 6 ஆம் பாடலில் பிசிர் என்ற சொல் உள்ளது.

"வையை உடைந்த மடை அடைத்தக் கண்ணும்

பின்னும் மலிரும் பிசிர் போல"

என்ற பாடலடிகளுக்கு, (பரிபாடல், 6) "வையையாற்றில் உடைப்பெடுத்த கரையின் மடையை அடைத்தப் பின்னும் மீண்டும் ஒழுகும் ஊற்றுநீர் போல" என்று உரை எழுதப்பட்டுள்ளது. இப்பாடலில் இடம்பெற்றுள்ள பிசிர் என்பதற்கு ஊற்றுநீர் என்பது பொருள்.

## அகநானூறு

அகநானூற்றில் 210, 250, 283 ஆகிய மூன்று பாடல்களில் பிசிர் என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறிகிறோம்.

"விசும்பணி வில்லிற் போகிப் பசும்பிசிர்த்

திரைபயில் அழுவம் உழக்கி"

என்ற 210 ஆம் பாடலில் பிசிர் (அகநானூறு, 210) என்ற சொல்லுக்கு, "பசிய திவலைகளையுடைய அலை நெருங்கிய கடற்பரப்பைக் கலக்கி" என்ற பொருளில் உரை அமைக்கப்பட்டுள்ளது. பிசிர் என்பதை நீர்த்திவலை எனலாம்.

"மயங்கு பிசிர் மல்குதிரை யுழந்த"

என்ற 250 ஆம் பாடலில் (அகநானூறு, 250) உள்ள பாடலடி, "நெருங்கிய துளிகள் மிக்க அலைகளால் வருந்திய என்ற பொருளில்" விளக்கப்பட்டுள்ளது. பிசிர் என்பது நீர்த்துளி.

"ஊட்டுப் பஞ்சிப் பிசிர்ப் பரந்தன்ன"

என்ற 283 ஆம் பாடலடிக்கு (அகநானூறு, 283), "செந்நிறம் ஊட்டிய பஞ்சின் பிசிர் பரவியது போன்று" என விளக்கம் தரப்பட்டுள்ளதை அறியலாம்.

## புறநானூறு

புறநானூற்றில் பல சொற்கள் இடம்பெற்றிருந்தாலும் பிசிர் என்ற சொல் 225 ஆம் பாடலில் பதிவுசெய்யப்பட்டுள்ளது.

"கடையோர் விடுவாய்ப் பிசிரொடு, சுடுகிழங்கு நுகர"

என்ற பாடலடி, (புறநானூறு, 225) பின்செல்வோர் நீங்கிய வாயைக்கொண்ட பிசிருடனே சுடப்பட்ட கிழங்கை உண்பர் என்று உரையாசிரியர் பொருள் எழுதுவர். இங்கு, பிசிர் என்பதை நாருடன் கூடிய பனங்கிழங்கு என அறியலாம்.

"தென்னம் பொருப்பன் நல் நாட்டுள்ளும்

பிசிரோன் என்ப என் உயிர் ஓம்புநனே"

என்ற 25 ஆம் பாடலில் (புறநானூறு, 215) பிசிரோன் என்ற சொல் பதிவு செய்யப்பட்டுள்ளது. பிசிர் என்னும் ஊர் தென்திசையில் பொதியின் மலையை உடைய பாண்டி நாட்டில் தொலைவில் உள்ளது. அப்பிசிர் என்ற உள்ளோனாகியவன் என் உயிரைப் பாதுகாப்பவன் என்று இந்தப் பாடலடிக்கு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. பிசிரோன் என்பது பிசிர் என்ற ஊரினன் எனக் கோப்பெருஞ்சோழன் பிசிராந்தையாரைக் குறிப்பிடுகிறார்.

புறநானூற்றில் கோப்பெருஞ்சோழனின் தோழனாகிய பிசிராந்தையார் என்னும் பொருள் கொண்ட புலவர் பாண்டிய நாட்டில் உள்ள பிசிர் என்னும் ஊரைச் சேர்ந்தவர். ஆதன்தந்தை ஆந்தை என்று மருவி வழங்கப்பட்டிருக்கலாம் என்பர். பிசிராந்தையார் அகநானூற்றில் 308 ஆம் பாடலையும் நற்றிணையில் 91 ஆம் பாடலையும் புறநானூற்றில் 67, 184, 191, 212 ஆகிய நான்கு பாடல்களையும் பாடியுள்ளார்.

## மதிப்பீடு

• சங்க இலக்கியத்தில் சொற்கள் பரவலாகக் காணப்பட்டாலும் இன்றும் சில சொற்கள் புழக்கத்தில் உள்ளனவா? என்ற

கருதுகோளை மையமாகக் கொண்டு ஓர் ஆய்வை முன்னெடுக்க வேண்டிய தேவையிருக்கிறது.

- சங்க இலக்கியத்தில் பதினாறு பாடல்களில் பிசிர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது.
- பிசிர், பிசிர, பிசிரோன், பிசிராந்தை ஆகிய சொற்கள் சங்கப் பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.
- பிசிர் என்பதற்குத் துளிமழை, ஊர், நுரை, நீர்த்துளி, நீர்த்திவலை, மழைத்துளி, சிறு சிறு துளிகள், தீப்பொறி, நுண்ணியத் திவலை, மிக்க நீர்த்துளிகளையுடைய வெள்ளம், ஊற்றுநீர் என உரையாசிரியர்கள் பல பொருண்மைகளைக் கொண்டிருக்கின்றனர் என்பதை இக்கட்டுரையின் வாயிலாக அறியமுடிகிறது.
- பிசிர் என்ற சொல் சமகாலத்தில் பயன்பாட்டில் உள்ளதா? அவ்வாறு பயன்பாட்டில் இருந்தால் என்ன பொருளில் வழங்கப்படுகிறது? என்ற தேடல் அவசிய தேவையாக இருக்கிறது.

துணை நூல்கள் & கட்டுரைகள்

1. மாதையன். பெ., 2007 சங்க இலக்கியச் சொல்லடைவு, முதற்பதிப்பு, பதிப்புத்துறை, தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் – 613010.

2. சோமசுந்தரனார். பொ.வே. 1974, அகநானூறு (மணிமிடைப் பவளம், நித்திலக்கோவை), முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

3. சோமசுந்தரனார். பொ.வே. 1975, பரிபாடல் மூலமும் உரையும், முதற்பதிப்பு, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 06.

4. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.), 2004, நற்றிணை மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

5. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.), 2004, ஐங்குறுநூறு மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

6. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.), 2004, புறநானூறு மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

7. ஆலிஸ்.அ.(உ.ஆ.), 2004, பதிற்றுப்பத்து மூலமும் உரையும், முதற்பதிப்பு, நியு செஞ்சுரி புத்தக நிலையம், சென்னை – 98.

8. சிங்காரவேலு முதலியார். ஆ., 1981, அபிதான சிந்தாமணி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.

9. கதிரைவேற் பிள்ளை. ந., 1981, தமிழ்மொழியகராதி, முதற்பதிப்பு, ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், சி – 2/15, எஸ்.டி.எ., புதுதில்லி – 110016.

10. Thomas Lehmann And Thomas Malten, 1993, A WORD INDEX FOR CANKAM LITERATURE, 2nd Edition, Institute Of Asian Studies, Chemmancherry, Chennai – 19, Tamilnadu, India.

---

## ஒருபொருட் பன்மொழி மலர்மாலை

| | |
|---|---|
| அணி | சூட்டு |
| அணியல் | தார் |
| அலங்கல் | தெரியல் |
| ஆரம் | தொங்கல் |
| இலம்பகம் | தொடலை |
| ஒலியல் | தொடை |
| கண்ணி | பிணையல் |
| கத்திகை | பூமாலை |
| கோதை | மலர்மாலை |
| சுருக்கை | மாலை |

### உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரியில் (தன்னாட்சி)

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022










தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் உலகநாத நாராயணசாமி அரசினர் கல்லூரி (தன்னாட்சி) இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2022 நிகழ்வு 27.10.2022 ஆம் நாள் முற்பகல் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சிவ.முருகேசன் அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் சு.முருகேசன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். கல்லூரி முதல்வர் முனைவர் கே.சேகர் அவர்கள் தலைமையுரை ஆற்ற, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றிய நோக்கவுரை நிகழ்த்தினார். இயக்ககத்தின் தொகுப்பாளர் வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரை வழங்க, கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் த.அருள் பத்மராசன் அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வைக் கல்லூரித் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் ப.தேவராசு அவர்கள் தொகுத்து வழங்கினார். நிகழ்வில் இயக்ககப் பதிப்பாசிரியர் திரு.கி.தமிழ்மணி உடன் இருந்தார்.

## ஸ்ரீ தேவி கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் (தன்னாட்சி)

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்–2022







தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் ஸ்ரீ தேவி கலை (ம) அறிவியல் கல்லூரி, தமிழ்த் துறை இலக்கிய மன்றம் இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2022 நிகழ்வு 27.10.2022 ஆம் நாள் பிற்பகல் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் சுபாஷினி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரிச் செயலர் திரு.ப.இரமேஷ் அவர்கள் தலைமையுரை வழங்கினார். கல்லூரி முதல்வர் முனைவர் வி.இலட்சுமிபதி அவர்கள் முன்னிலை வகித்தார். கல்லூரியின் கூடுதல் முதல்வர் திருமதி மரிய லியோனி பமிலா அவர்கள் வாழ்த்துரை வழங்க, அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் நோக்கவுரை நிகழ்த்தினார். இயக்ககத்தின் தொகுப்பாளர் வே.பிரபு அவர்கள் சொற்குவை பற்றி விளக்கவுரை வழங்க, கல்லூரி மாணவி மு.கவிதா அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வில் இயக்ககப் பதிப்பாசிரியர் திரு.கி.தமிழ்மணி உடன் இருந்தார்.

## ஆல்ஃபா கலை(ம) அறிவியல் கல்லூரியில் (தன்னாட்சி)

# "சொற்குவை" மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022







தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், சென்னை ஆல்ஃபா கலை (ம) அறிவியல் கல்லூரி, நந்திவரம் தேடல்களம் அறக்கட்டளை இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்-2022 நிகழ்வு 29.10.2022 ஆம் நாள் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் தமிழரசி கோதைமார்பன் அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் சிவசங்கர் ஆறுமுகம் அவர்கள் தலைமை தாங்கினார். கல்லூரி நிறுவனத் தலைவர் சேவா ரத்னா டாக்டர் திருமதி கிரேஸ் ஜார்ஜ் அவர்கள், கல்லூரி துணைத் தலைவர் திருமதி சுஜா ஜார்ஜ் அவர்கள், நந்திவரம் தேடல்களம் அறக்கட்டளைத் தலைவர் தமிழ்ச்செம்மல் நந்திவரம் பா.சம்பத்குமார் ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினார்கள். அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி சிறப்புரை ஆற்றினார். இந்நிகழ்வில் இயக்கக மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மா.பூங்குன்றன் அவர்கள் மொழியியல் - சொற்பிறப்பு-கலைச் சொல்லாக்கம் பற்றி பயிற்சி வழங்க, இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி.பாலசுப்பிரமணியன் அவர்கள் மொழிபெயர்ப்புக் கலை பற்றியும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோச்சனா அவர்கள் இலக்கியத்தில் கலைச்சொற்கள் பற்றியும் பயிற்சி வழங்கினார்கள். இந்நிகழ்வில் இயக்ககத் தொகுப்பாளர் வே.பிரபு மற்றும் இயக்ககப் பதிப்பாசிரியர் கி.தமிழ்மணி ஆகியோர் உடன் இருந்தனர். நிறைவாக, கல்லூரி மாணவி செல்வி செ.காயத்ரி நன்றியுரை கூறினார். நிகழ்வில் மாணவ-மாணவியர் பலர் கலந்து கொண்டனர்.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 119–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 18.10.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 119–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், திரு.அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம், அலுவல்சார் உறுப்பினர்கள் மற்றும் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு ஆகியோர் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 252 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 120–ஆவது கூட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 26.10.2022 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 120–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், திரு.அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம், அலுவல்சார் உறுப்பினர்கள் மற்றும் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு ஆகியோர் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 217 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.



"தமிழ் அகராதியியலின் தந்தை" என்று போற்றப்படும் வீரமாமுனிவரின் தமிழ்த்தொண்டைப் போற்றும் வகையில், அவரது பிறந்தநாளான நவம்பர் 8ஆம் நாளைத் "தமிழ் அகராதியியல் நாள் விழா"வாகக் கொண்டாட தமிழ்நாடு அரசு பிறப்பித்துள்ள அரசாணையின்படி, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால், "தமிழ் அகராதியியல் நாள் விழா" கொண்டாடப்பட்டுவருகிறது.

அந்தவகையில் 2022 ஆம் ஆண்டுக்கான "தமிழ் அகராதியியல் நாள் விழா" சென்னை, தரமணியில் அமைந்துள்ள "உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில்" 08.11.2022ஆம் நாள் காலை சிறப்புற நடைபெற்றது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலுள்ள, பேரறிஞர் அண்ணா கருத்தரங்குக் கூடத்தில் நடைபெற்ற இவ்விழாவில், மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் செயலாளரும், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறையின் அரசு செயலாளருமாகிய முனைவர் ம.சு. சண்முகம் இ.ஆ.ப., அவர்கள் பங்கேற்று, 2021 ஆம் ஆண்டுக்கான "தூயதமிழ்ப் பற்றாளர் விருது", "தூயதமிழ் ஊடக விருது", "நற்றமிழ்ப் பாவலர் விருது" ஆகிய விருதுகளை வழங்கி, 58அறிஞர்களின் கருத்துச் செறிவார்ந்த கட்டுரைகள் அடங்கிய 2022 ஆம் ஆண்டுக்கான "அகராதி ஆய்வு மலரை" வெளியிட்டு முன்னிலையுரையாற்றிச் சிறப்பித்தார்.

மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் செயலாளரும், தமிழ்வளர்ச்சி மற்றும் செய்தித்துறையின் அரசு செயலாளருமாகிய முனைவர் ம.சு. சண்முகம் இ.ஆ.ப., அவர்களின் முன்னிலையில் நடைபெற்ற இவ்விழாவில், தஞ்சை – தமிழ்ப் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள் பங்கேற்றுச் சிறப்புரையாற்றினார். விழாவில், அகராதியியல் அறிஞர் முனைவர் கு. அரசேந்திரன், வி.ஜி.பி. உலகத் தமிழ்ச் சங்கத் தலைவர் திரு. வி.ஜி. சந்தோசம், கார்க்கி ஆராய்ச்சி நிறுவனத் தலைவர் முனைவர் மதன் கார்க்கி உள்ளிட்ட தமிழாளுமைகள் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் வரவேற்புரை வழங்க, விழாவின் நிறைவில் தமிழ்வளர்ச்சி இயக்கக இயக்குநர் முனைவர் ந. அருள் அவர்கள் நன்றியுரை கூறினார்.

விழாவின் தொடக்கமாக, காலை 9.30 –10.30 வரை, மயூரி நிகழ்த்துக் கலைக்கழகம், கலைமாமணி விசயலட்சுமி பூபதி வழங்கும் "எங்கும் தமிழ்!" கலைநிகழ்ச்சி நடைபெற்றது. இவ்விழாவில், அரசு அலுவலர்கள், அகராதியியல் வல்லுநர்கள், விருதாளர்கள், தமிழறிஞர்கள், ஆய்வாளர்கள், மாணவ–மாணவியர் மற்றும் தமிழார்வலர்கள் உள்ளிட்டோர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

# விழாவில் விருதுபெற்றோர் விவரங்கள்

## அ) தூய தமிழ்ப் பற்றாளர் விருது –2021

திரு. "வாசல்" எழிலன் (எ) சு. கந்தசாமி – செங்கல்பட்டு
திரு. தாமரைப் பூவண்ணன் (எ)
க. கோவிந்தராசு – சென்னை
பாவலர் பெரு.முல்லையரசு – தருமபுரி
பண்ணை கோமகன் (எ)
திரு. தே.இரா.கோபால் – திண்டுக்கல்
திரு. செ.வ. மதிவாணன் – கள்ளக்குறிச்சி
புலவர் வெற்றிச் செழியன் – காஞ்சிபுரம்
முனைவர் கடவூர் மணிமாறன் – கரூர்
திரு. மு. பரமசிவம் (எ)
விளவை செம்பியன் – பெரம்பலூர்
செல்வன் ப. சிவபிரகதீசு – இராமநாதபுரம
திரு. பழ. பாசுகரன் – சிவகங்கை
திரு. ஆ. சின்னச்சாமி – தேனி
திரு. ச.ம. மாசிலாமணி – திருவள்ளூர்
செல்வன் பூ. இரவிக்குமார் – திருச்சிராப்பள்ளி

## ஆ) நற்றமிழ்ப் பாவலர் விருது –2021

திரு. கருவூர் கன்னல் – மரபுக்கவிதை
முனைவர் பெ.தமிழ்ச்செல்விகுணசேகரன் – புதுக்கவிதை

## இ) தூய தமிழ் ஊடக விருது – 2021

அறிவியல் ஒளி (திங்களிதழ்)
திரு. நா.சு. சிதம்பரம் – அச்சு ஊடகம்
இணையம் (வலையொளி)
முனைவர் மு. இளங்கோவன் – காட்சி ஊடகம்

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 55 – 59 வரையிலான அமர்வுகள் 2022 அக்டோபர் 14, 20,28 நவம்பர் 04,11 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர்

பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களும் மேற்கொண்டனர்.

## 14.10.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. வை. கருணைநாதன்**
மொழிபெயர்ப்பாளர், இலங்கை



**முனைவர் மெய். சித்ரா**
பகுதிநேர விரிவுரையாளர், ஸ்கோப்,
ஹாங்காங் மாநகர் பல்கலைக்கழகம்,
ஹாங்காங்



**முனைவர் ம. இராமச்சந்திரன்**
துறைத்தலைவர், தமிழாய்வுத்துறை,
ஸ்ரீவித்யா மந்திர் கலை (ம)
அறிவியல் கல்லூரி, ஊத்தங்கரை,
கிருட்டினகிரி மாவட்டம்



**முனைவர் மா. அன்பரசு**
உதவிப் பேராசிரியர், வேளாண்புலம்,
வேல்ஸ் அறிவியல் தொழில்நுட்ப உயர்
ஆராய்ச்சி நிறுவனம், பல்லாவரம்,
சென்னை



## 20.10.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. பா. துவாரகன்**
பொறுப்பு அலுவலர், யாழ்ப்பாண
மருத்துவ அருங்காட்சியகம் (ம)
தொலை மருத்துவப் பிரிவு,
இலங்கை



**முனைவர் வே. அருட்பாமணி**
தமிழார்வலர், காஞ்சிபுரம்



### 28.10.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. மணிவேலுப்பிள்ளை**
மொழிபெயர்ப்பாளர், கனடா



**பொறிஞர் பெ. செல்வக்குமார்**
தலைவர், முன்சென் தமிழ்ச் சங்கம், செருமனி



**திரு. மா. கண்ணன்**
மொழிபெயர்ப்பாளர், ஒன்றிய அரசகம், இங்கிலாந்து



**திரு. நா.சு. சிதம்பரம்**
ஆசிரியர் – "அறிவியல் ஒளி" திங்களிதழ், சென்னை



**திரு. செ. பன்னீர்செல்வம்**
தலைவர், உலகத் தமிழ் நாற்றங்கால், மதுரை



### 04.11.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. மணிவேலுப்பிள்ளை**
மொழிபெயர்ப்பாளர், கனடா



**திரு. ப. தியான்**
தமிழாசிரியர், செருமனி



**தகைசால் பேராசிரியர் வீ. ரேணுகா தேவி**
மேனாள் துறைத்தலைவர், மொழியியல் துறை, மேனாள் புலத்தலைவர், மொழியியல் (ம) தொடர்பியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை



**முனைவர் அ.போ. இருங்கோவேள்**
பேராசிரியர் – மருத்துவ சமூகவியல் (ம) தமிழிலக்கியம் சங்கர நேத்ராலயா, சென்னை



### 04.11.2022ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பிரான்சு



**தமிழ்த்திரு. நளினி இராகவன்**
மாணவி, பிரான்சு



**முனைவர் சு. சந்திரசேகரன்**
மேனாள் பேராசிரியர், கணிப்பொறியியல் (ம) தமிழ்மொழி
வடவள்ளி, கோயம்புத்தூர்



**திரு. செ. பன்னீர்செல்வம்**
தலைவர், உலகத் தமிழ் நாற்றங்கால், மதுரை



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

திரு. வை. கருணைநாதன்

osmosis – மென்சவ்வூடு பரவல்
endosmosis – மென்சவ்வூடு அகப்பரவல்
exosmosis – மென்சவ்வூடு புறப்பரவல்

முனைவர் ம. இராமச்சந்திரன்

Judicial Criticism – தீர்வுமுறைத் திறனாய்வு
Organic Theory – ஐம்புலக் கொள்கை
Cultural Factors – பண்பாட்டுக் கூறுகள்

திரு. பா. துவாரகன்

Gender Lens – பால்நிலை நோக்கு
Airstrip – வான்பொல்லம்
Aerodrome – வான்புலம்

முனைவர் மெய். சித்ரா

Tonogenesis – மொழியொலிப்பு முறை
Theophor – அருட்பெயர்
Chimeric – பன்விலங்கமைப்பு

முனைவர் மா. அன்பரசு

Shoal – மணற்திட்டு
Dunder – headed – மூடர்
Knaves – நேர்மையற்றோர்

முனைவர் வே. அருட்பாமணி

Emergency situation – நெருக்கடிச் சூழல்
Catharsis – ஆற்றுப்படுத்துதல்
Mental Hygiene – மனநலம்

திரு. மணிவேலுப்பிள்ளை

Agoraphobia – திரள்வெருட்சி
Anorexia nervosa – ஊண்வெருட்சி
Delusion – மலைவு

பொறிஞர் பெ. செல்வக்குமார்

Rutschig – மென்பனி வழுக்கல்
Das Glatties – படிமநிலைப்பனி
Schnee knirschen – நொய்ப்பனி

திரு. மா. கண்ணன்

Eco – friendly Driving – சூழல்நல ஓட்டம்
Blind spot – கட்புலனாகா இடம்
Tailgate – நெருக்குநிலை ஓட்டம்

திரு. நா.சு. சிதம்பரம்

Anastigmatic – உருப்பிறழ்ச்சி
Baryonic – அணுத்துணைப்பொருள்
Degausser – காந்தப்புல நீக்கி

திரு. செ. பன்னீர்செல்வம்

Hyperbole – மிகைப்படுத்தணி
Litotes – குன்றவுருவணி
Onset Restriction – அசைமுதற் கட்டு

திரு. மணிவேலுப்பிள்ளை

Absolutism – தனியாட்சி
Anarchism – ஆட்சியறவு நெறி
Dictatorship – வன்கோன்மை

திரு. ப. தியான்

Screen – கணித்திரை
Animation – அசைவூட்டம்
Reset – மீட்டமை

தகைசால் பேராசிரியர் வீ. ரேணுகா தேவி

Derivation – சொல்லாக்கம்
Inflection – சொல் திரிபு
Zero morph – சுழிய உருபு

முனைவர் அ.போ. இருங்கோவேள்

Excimer Laser – மென் கிளர் கதிர்
Posterior Polar
Cataract (PPC) – பின்புறக் கண்புரை
Intra Ocular Lens – உள் விழி வில்லை

பொறிஞர் பத்மப்ரியா இராகவன்

Frankenstein – பிறவியொழிப்பான்
Frankenfood – மரபுத்திரிமிசை / மரபணுமாற்ற உணவு
Cli – Fi – பருவநிலைப் புனைவு

தமிழ்த்திரு. நளினி இராகவன்

Vaxi–Taxi – தடுப்பூசியூர்தி
Spite House – இடரகம்
Lewk – மிகையொப்பனை

முனைவர் சு. சந்திரசேகரன்

Digital Identifier – எண்ணிம அடையாளக்குறி
Cryptopunk – பகுபடாப் படக்குறி
Block Chain – தொகுப்பு ஆரம்

திரு. செ. பன்னீர்செல்வம்

Autapomorphy – தற்தொலையுருபு
Character set – ஒப்புமைக்கூறு
Homology – இல்லியம்